நக்கரைசாரு நடுநாளைநாரையூர்
நக்கரைவக்கரையோ நாமென்ன - நக்குரையாம்
வண்டாழுங்கொன்றையான் மால்பணிந்தான்மற்றவர்க்காய்
வண்டாழுங்கொண்டான் மதி. (சரு)

மதியாலடுகின்ற தென்னுமால்கூரு
மதியாதேவைதுரப்ப ரென்னு - மதியாதே
மாதெய்வமேத்து மறைக்காடாவீதேசொன்
மாதெய்வங்கொண்ட வனப்பு. (ருகூ)

வனப்பார்நிறமும் வரிவளையுநாணும்
வனப்பார்வளர்சடையான கொள்ள - வனப்பாற்
? கடற்றிரையுமீருமிக் கங்குல்வாய்
கடற்றிரையுமீருங் கனன்று. (ருள)

கனன்றுமிநன்னெஞ்சே கண்ணுதலார்க்காளாய்க்
கன்ன்றார்களிற்றுரிமால் காட்டக் - கனன்றே
ருடம்பட்டநாட்டத்த ளொண்ணேயுந்தன்னுளா
வுடம்பட்டநாட்ட னுரு. (ருஅ)

உருவியலுஞ்செம்பவள மொன்றுருடம்பி
லுருவியலுஞ்சூல முடைய - னுருவியலு
மாலேற்றுருன்முகனு மண்ணேறுமின்னும்போய்
மாலேற்றுறக்கிதோ வடிவு. (ருகூ)

வடிவாரறப்பொங்கி வண்ணக்கச்சுந்தி
வடிவார்வடம்புனைந்தும் பொல்லா - வடிவார்வேன்
முக்கூடலம்மா முருகமருங்கொன்றைய்த்தார்
முக்கூடமாட்டா முலை. (கூO)

முலைநலஞ்சேர்கானப்பேர் முக்கணனென்னு
முலைநலஞ்சேர்மொய்சடையா னென்னு - முலைநலஞ்சேர்
மாதேவாவென்று வளர்கொன்றைவாய்சோர
மாதேவாசோரல் வளை. (கூக)

வளையாழியோடகல மாறந்தானென்னும்
வளையாழிநன்னெஞ்சே காணில் - வளையாழி
வன்னஞ்சைக்கண்டமரர் வாய்சோரவந்தெதிர்ந்த
வன்னஞ்சக்கண்டன் வரில். (௯௨)

வரிநீலவண்டலம்பு மாமறைக்காட்டங்கேழ்
வரிநீர்வலம்புரிக ளுந்தி - வரிநீ
ரிடமணன்மேலன்னலங்கொண் டின்றெனாய்செய்தா
ரிடமணன்மேலீச னெமக்கு. (௯௩)

ஆக்காரமாடரவ நாணாறுவைத்தோல்பொடிசாந்
தக்காரந்தீர்த்தே னடியேற்கு - வக்காரம்
பண்டாரங்கனெங்கை படியிணைந்தேசர்வெண்காட்டிற்
பண்டாரங்கனெங்கள் பவன். (௯௪)

பவனடிபார்விண்ணீர் பகலோன்மதித்தீப்
பவனஞ்சோராமுதம் பெண்ணாண் - பவனஞ்சேர்
கவன்றெறுழி யவனெனகிகாட்டிற்
கவன்வகையேத்திறேன் காண். (௯௫)

காணங்கைபின்மை கருதிக்கவலாதே
காணங்கையாற்றொழுநன்னெஞ்சே - காணங்கை
பாவனையாய்நின்றான் பயிலும்பரஞ்சோதி
பாவனையாய்நின்ற பதம். (௯௬)

பதங்களனைத்துயர்ந்தான் பான்மதிழ்ந்தான்பண்டை
பதங்கனெயிறு பறித்தான் - பதங்கையா
லஞ்சலிசெய்பாலு மாக்கருதிக்கானெஞ்சேயாக்
கஞ்சலிசெய்பாலு மாக்கு. (௯௭)

ஆக்கூர்பதிவாடா வாவிசேர்தாழ்கின்றே
றாக்கூரலர்தானமுறிதா - வாக்கூர்
மறையோம்புமாடத்து மாமறையோனன்று
மறையோம்புமாதவர்க்காய் வந்து. (௯௮)

வந்தியான்சீறினு மாழிமடநெஞ்சே
வந்தியாயுள்ளத்து வைத்திராய் - வந்தியாய்
நம்பரனையாடு நனிர்புன்சடையானை
நம்பரனைநாடோறு நட்டு. (ருகூ)

நட்டமாகின்றன வோணசங்கரானவன்பால்
நட்டமாநன்னீர்மை வாடினே - னட்டமா
டயானெரியாடி யெம்மானிருங்கொன்றை
யீயானேனுய்வ திலம். (சா0)

இலமலரஞ்சேவடியா ரேகப்பெருரே
இலைமலரோயாயினுமாக - விலமலரு
மாம்பல்சேர்செவ்வாயார்க் காடாதேயாடினே
ரும்பல்சேர்வெண்டலையார்க் காள். (சாக)

ஆளானஞ்சேர்களிறுந் தேருமடன்மாவு

நாடகங்களாட்டயரு நம்பன்றிருநாம
நாடகங்களாடி நயந்து. (சாஉ)

நயந்தநாள்யாவிரப்ப நற்சடையான்கொன்றை
நயந்தநாளைன்னீர்மை வாட - நயந்தநா
ளம்பகலஞ்செற்று னருளானங்கவை
ளம்பலம்பாயு மலர்ந்து. (சாங)

அலங்காரமாடரவ மென்புதோலாடை
யலங்காரவண்ணற் கழகா - ரலங்கார
மெய்காட்டுவார்குழலா ரென்றுவார்வெள்ளேற்றன்
மெய்காட்டும்வீடாம் விரைந்து. (சாச)

விரையார்புனற்கங்கை சேர்சடையான்பொன்னூர்
விரையார்பொழிற்புறத்தை மேயான் - விரையானீ
றென்பணிந்தானீச னிறையானெரியாடி
யென்பணிந்தானீச னெனக்கு. (சாரு)

எனக்குவமையில்லா வெழிலிமுந்நீரென்று
மெனக்குவமையில்லாநோய் செய்தா - னினக்குவமைக்
கண்டத்தானல்லவேதன் காரோணத்தெம்மானைக்
கண்டத்தானெஞ்சேகாக் கை. (சுசு)

காக்கைவளையென்பார்ப்பார்க் கன்பாப்பாணையாதே
காக்கைவளையென்பார்ப்பா ளூர்குரக்குக் - காக்கைவளை
யாடானையேறிய னன்பெனவிர்சடைய
னூடானையான தமைவு. (சுஎ)

அமையாமென்றோண்மெலிவித் தம்மாமைகொண்டிங்
கமையாநோய்செய்தா னனங்கே - யமையாருஞ்
சாமத்தகண்டன் சடைசேரிளம்பிறையன்
சாமத்தனிக்கோய்செய் தான். (சுஅ)

தானக்கணக்க பிறையன்பிறைக்கோட்டுத்
தானக்களிற்றுரியன் றன்பழனன் - றானத்
தனையானை வனாய னுயிரைமுக்குமாற்கு
மனையானுடையா னருள். (சுகூ)

அருணம்பாற்செஞ்சடைய னோமாத்தரம்மா
னருணம்பானல்கு மழுத - னருணம்பா
லோராழித்தேரா னயிரட்டவுத்தமனை
யோராழிநெஞ்சே யுவ. (எ0)

உவவாதவமலர்கொண் டுத்தமனையுன்னி
யுவவாமனமிழும் வேட்கை - யுவவா
றெழுமதிபோல்வான்முகத் தீசனார்க்கென்னே
யெழுமதிபோலீச னிடம். (எக)

இடமால்வலமாலை யன்னமேதம்ப
மிடமால்வலமானைத் தேர்த்தி - யிடமாய
மூவாமதிபுனைய முன்னிலங்குமொய்சடையான்
மூவாமதியான் முனி. (எஉ)

முனிவன்மால்செஞ்சடையான் முக்கணனென் று
முனிவன்மால்செய்துமுன் னிற்கு - முனிவன்மால்
போற்றார்புரமெரித்த புண்ணியன்றன்பொன்னடிகள்
போற்றாநாளின்று புலர்ந்து. (௭௩)

புலர்ந்தால்யானுற்றேன் புறனுரையுமஃதே
புலர்ந்தானூர்புன்கூரா னென்னும் - புலர்ந்தாய
மண்டளியனம்மா னவர்தம்மடியார்தம்
மண்டளியன்பின்போ மனம். (௭௪)

மனமாயநோய்செய்தான் வன்கொன்றைதாரான்
மனமாயவுள்ளார வாரான் - மனமாயப்
பொன்மாலைசேரப் புனைந்தான்புனைதருப்பைப்
பொன்மாலைசேர்சடையான் போந்து. (௭௫)

போந்தார்புகவணைந்தார் பொன்னேர்ந்தார்பொன்னுடைமை
போந்தாரொழியார் புரமெரித்தார் - போந்தா
ரிலங்கோலவாண்முகத் தீசனுற்கெல்லே
யிலங்கோலந்தோற்ப இனி. (௭௬)

இனியாருமாளாக வென்னுவர்கொலென்று
ரினியானைக்குனிருக்கைக் குன்றா - வினியானைத்
தாளங்கையாற்பாடித் தாழ்சடையான்றனுடைய
தாளங்கையாற்றொழுவார் தாம். (௭௭)

தாமரைசேர்நான்முகற்கு மாற்குமறிவரியார்
தாமரைசேர்பாம்பர் சடாமகுடர் - தாமரைசேர்
பாணியார்தீர்த்[illegible] பா[illegible]ரம்புநான்மறையார்
பாணியார்தீர்[illegible]ர். (௭௮)

பார்கால்[illegible]பனிமதியன்
பார்[illegible] - பார்கோலக்
கோச[illegible]போனெஞ்சே
கோகு[illegible] (௭௯)

கோப்பாடியோடாதே நெஞ்சமொழிகூத்தன்
கோப்பாடிக்கோசரணங் குற்றாலங் - கோப்பாடிப்
பின்னைக்காய்நின்றார்க் கிடங்கொடுக்கும்பேரருளான்
பின்னைக்காமெம்பெருமான் பேர். (அ0)

பேராளையீருரிவை போர்த்தானையாயிரத்தெண்
பேரானையீருருவம் பெற்றானைப் - பேராகங்
கண்டானையுத்தமனை யன்காதார்க்கெஞ்ஞான்று
முண்டாகாதல்லல் லுயிர். (அக)

உயிராயமூன்றொடுக்கி யைந்தடக்கியுள்ளத்
துயிராயவொண்மலர்த்தா ளூடே - யுயிரான்
பகர்மனத்தான்பாசுபதன் பாதம்பணியப்
பகர்மனமேயாசைக்கட் பட்டு. (அஉ)

பட்டாரண்பட்டாங்க ளெம்மான்பரஞ்சோதி
பட்டாரெலும்பணியும் பாசுபதன் - பட்டார்த்த
கோவணத்தான்கொல்லேற்ற னென்றென்றுநெஞ்சமே
கோவணத்தம்பனையே கூறு. (அங)

கூற்றும்பொருளும்போற் காட்டியென்கோல்வளையைக்
கூற்றின்பொருண்மயன்ற குற்றாலன் - கூற்றின்
செருக்கழியச்செற்ற சிவற்கடிமைநெஞ்சே
செருக்கழியாமுன்னமே செய். (அச)

செய்யான்கருமிடற்றான் செஞ்சடையான்றென்பொழிற்குற்
செய்யான்பழனத்தான் றேவலருஞ் - செய்யாற
றூட்டுறையுமின்றனை காடுதம்போய்நன்னெஞ்சே
நாட்டுறையுமின்றனை நாம். (அரு)

நாவாயகத்துளதே * நாமுளமேநம்பீச
ஞாளாய்ப்போனன்னெறிக்க ணுய்க்குமே - நாவாயத்
துய்க்கப்படும்பொருளைக் கூட்டுதுமற்றவர்க்காட்
செய்க்கப்படுவதாங் கூறு. (அகூ)

கூதொன் றுணக்கறியச் சொல்லினேனன்னெஞ்சே
கூதன்சொலற்கரிய சோதியான் - கூகின்
கொழுந்தேன்கமழ்சோலைக் குற்றாலம்பாடிக்
கொழுந்தேயிழந்தேன் குருகு. (அஎ)

குருகிளவேய்த்தோண்மெலியக் கொங்கைமார்புல்கிக்
குருகிளையார்கோடு கொடாமே - குருகிளரும்
போதார்கழனிப் புகலூரமர்ந்துறையும்
போதாநின்பொன்முடிக்கட் போது. (அஅ)

போதரங்கவார்குழலா ரென்றுவார்நன்னெஞ்சே
போதரங்கநீர்கரந்த புண்ணியனைப் - போதரங்கக்
கானகஞ்சேர்சோதியே கைவிளக்காநின்றுடுங்
கானகஞ்சேர்வாற்கடிமை கல். (அகூ)

கற்றுனஞ்சாடுகா வாலிகளந்தைக்கோன்
கற்றுணைக்கல்லாத நாளெல்லாங் - கற்று
னமரர்க்கமர ரார்க்கடிமைபூண்டா
ரமரர்க்கமரரா வார். (கூ0)

ஆவாமனித ரறிவிலரேயாதொன்று
மாவார்போற்காட்டி யழிகின்று - ராவா
பகனடிப்பாடிப் படர்சடைக்குப்பல்பூப்
பகனடியேத்தார் பகர்ந்து. (கூக)

பகனட்டம்பாட்டயரும் பாட்டோடாட்டெல்லி
பகனட்டம்பாழ்படுக்கு முச்சி - பகனட்டத்
தாங்காருழுதெழுவார் தாழ்சடையார்தம்முடைய
தாங்காருழுத றலை. (கூஉ)

தலையாலங்காட்டிற் பலிதிரிவரென்னும்
தலையாலங்காடர்தா மென்னுந் - தலையாய
பாகீரதிவளரும் பல்சடையீர்வல்விடையீர்
பாகீரதிவளரும் பண்பு. (கூங)

பண்பாயநான்மறையான் சென்னிப்பலிதேர்ந்தான்
பண்பாயபைங்கொன்றைத் தாரருளான் - பண்பாற்
றிருமாலுமங்கைச் சிவற்கடிமைசெய்வான்
றிருமாலுமங்கைச் சிவன். (௯௪)

சிவன்மாட்டுகவெழுந்து நாணுநகுமென்னுஞ்
சிவன்மேயசெங்குன்றூ ரென்னுஞ் - சிவன்மாட்டங்
காலிங்கனநினையு மாயிழையீரங்கொன்றை
யாலிங்கனநினையு மாறு. (௯௫)

ஆறுவெங்கூற்றுதைத் தானைத்தோல்போர்த்துகந்தங்
காரூர்சடையீர்க் கமையாதே - யாறுத
வானினத்தார்தாந்த மணியிழையினார்க்கடிமை
யானினத்தார்தாந்தவிர்ந்த தாட்டு. (௯௬)

ஆட்டுமரவ ரழிந்தாரெலும்பணிவா
ராட்டுமிடுபலிகொண் டாரமர - ராட்டுமோர்
போரேற்றான்கொன்றையான் போந்தான்பலிக்கென்று
போரேற்றான்போந்தான் புறம். (௯௭)

புறந்தாழ்குழலார் புறனுரையஞ்சாதே
புறந்தாழ்புலிப்பொதுவு ளாடி - புறந்தாழ்பொன் [யான்
மேற்றனிக்கோன்வெண்பிறையான் வெண்சுடர்போன்மேனி
மேற்றனிக்கோனென்றுரையான் மெய். (௯௮)

மெய்யன்பகலாத வேதியன்வெண்புரிநூன்
மெய்யன்விரும்புவார்க் கெஞ்ஞான்றும் - வெய்ய
னணையகலாநோக்கலா போற்றிகலானெஞ்சே
னணையிகலாகூறுவா னாறு. (௯௯)

நாறுண்பயறூட்டின் னாறுமலர்சொரிந்து
நாறுநொடிவதனின் மிக்கதே - நாறு
வுடையான்பரித்தவெரி யுத்தமனைவெள்ளே
றுடையானைப்பாடலா லொன்று. (௧00)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

பரணதேவநாயனார்

அருளிச்செய்த

# சிவபெருமான்றிருவந்தாதி.

---

ஒன்றுரைப்பீர்போலப் பலவுரைத்திட்டோயாதே
யொன்றுரைப்பீராயி னுறுதுணையா - மொன்றுரைத்துப்
பேரரவம்பூண்டு பெருந்தலையிலுண்டுழலும்
பேரரவம்பூணும் பிரான். (௧)

பிரானிடபமால்பெரிய மந்தாரம்வில்லுப்
பிரானிடபம்பேரொலிநா ணாகம் - பிரானிடம்
பேணுமுமைபெரிய புன்சடையின்மேலமர்ந்து
பேணுமுமையிடவம் பெற்று. (௨)

பெற்றும்பிறவி பிறந்திட்டொழியாதே
பெற்றும்பிறவி பிறக்கொழிமின் - பெற்றுங்
குழையணிந்தகோளரவக் கூற்றுதைத்தான்றன்னைக்
குழையணிந்தகோளரவ நீ. (௩)

நீயேயாளாவாயு நின்மைற்குநன்னெஞ்சே
நீயேயாளாவாயு நீள்வானி - வீயே
வேறார்புனற்சடையா வெங்களிடைமருதா
வேறார்புனற்சடையா வென்று. (௪)

என்றுமலர்தூவி யீசன்றிருநாம
மென்றுமலர்தூற்றி யேயிருந்து - மென்றும்

புகலூராபுண்ணியனே யென். (௫)

என்னேயிவளுற்ற மாலென்கொலின்கொன்றை
யென்னேயிவளொற்றி யூரென்னு - மென்னே
தவளப்பொடியணிந்த சங்கரனேயென்னுந்
தவளப்பொடியானைச் சார்ந்து. (௬)

சார்ந்துரைப்பதொன் றுண்டு சாவாமூவாப்பெருமை
சார்ந்துரைத்தகத்துவத்தி னுட்பொருளைச் - சார்ந்துரைத்த
வாதியேயம்பலவா வண்டத்தையாட்கொள்ளு
மாதியேயென்றென்பா லருள். (எ)

அருள்சேராதாரூர்தி யாருமலைய்தா
யருள்சேராதாரூர்தி யாடி - யருள்சேரப்
பிச்சையேற்றுண்டு பிறர்கடையிற்காணிமிர்த்துப்
பிச்சையேற்றுண்டுழல்வாய் பேச்சு. (அ)

பேச்சுப்பெருகுவதென் பெண்ணணைவியென்று
பேச்சுக்கடந்த பெருவெளியைப் - பேச்சுக்
குரையானையூனைக் குயிரானையொன்றற்
குரியானைநன்னெஞ்சே யுற்று. (௯)

உற்றுரையாய்நன்னெஞ்சே யோதக்கடல்வண்ண
னுற்றுரையாவண்ணமொன் றுளனே - யுற்றுரையா
யானையுரித்தானை யப்பனையெப்பொழுது
மானையுரித்தானை யடைந்து. (க0)

அடைந்துன்பாலன்பா யணிமணிகொண்டர்ச்சித்
தடைந்துன்பான்மேலுருத்த மாணிக் - கடைந்துன்பா
லவ்வமுதமூட்டி யணிமலருஞ்சூழ்ந்தன்று
வவ்வமுதமாக்கினாய் காண். (கக)

காணாய்கவாலி கதிர்முடிமேற்கங்கைதனைக்
காணாயக்காருருவிற் சேருமையைக் - காணா
யுடைதலைகொண் டூர்திரிவானைநச்சி
யுடைதலைகொண்டூர் திரி. (கஉ)

திரியும்புரமெரித்த சேவகனார்செவ்வே
திரியும்புரமெரியச் செய்தார் - திரியு
மரியான்றிருக்கயிலை யென்றுதார்மேனி
யரியான்றிருக்கயிலை யாம். (கங)

ஆம்பரிசேசெய்தங் கழியாக்கை - யாம்பரிசே
யேத்தித்திரிந்தானை யெம்மானையம்மானை
யேத்தித்திரிந்தானை யேத்து. (கச)

ஏத்துற்றுப்பார்த்த னெழில்வானடைவான்போ
லேத்துற்றுப்பார்த்த னிறைஞ்சுதலு - மேத்துற்றுப்
பாசுபதமன்றளித்த பாசூரான்பானீற்றன்
பாசுபதமின்றளியென் பால். (கரு)

பாலார்புனல்பாய் சடையானுக்கன்பாகிப்
பாலார்புனல்பாய் சடையானன் - பாலாடி
யாடுவான்பைங்க ணரவூர்வான்மேனிநீ
யாடுவானென்றென்றே யாங்கு. (கசு)

ஆங்குரைக்கலாம்பொன் மலர்ப்பாதமஃதன்றே
யாங்குறைக்கலாம்பொ னணிதில்லை - யாங்குறைத்த
வம்பலத்துமண்டத்து மப்பாலுமாய்நின்ற
வம்பரத்துமண்டத்து மாம். (கஎ)

மாயனையோர்பாக மமர்ந்தானைவானவரு
மாயவருமால்கடனஞ் சுண்டானை - மாய
வருவானைமாலை யொளியானைவானி
னுருவானையேத்தி யுணர். (கஅ)

உணராவனைகழலா வுற்றுன்பாற்சங்க
முணராவனைகழல வொட்டி - யுணரா
வனைந்தானமேனி யணியாரூரேசென்
றனைந்தானையாமாறு கண்டு. (ககூ)

கண்டிறந்துகாயெரியின் வீழ்ந்துகடிதோடிக்
கண்டிறந்துகாமன் பொடியாகக் - கண்டிறந்து
கானினுகந்தாடுங் கருத்தர்க்குக்காட்டினான்
கானினுகந்தாடுங் கருத்து. (உo)

கருத்துடையவாதி கறைமிடற்றெம்மீசன்
கருத்துடையகங்காள வேடன் - கருத்துடைய
வானேற்றானீற்றா னனலாடியாமாத்தூ
ரானேற்றானீற்றா னெரி.

(௨௧)

எரியாடியேகம்ப மென்னாதார்மேனி
யெரியாடியேகம்ப மாகு - மெரியாடி
யீமத்திடுங்காடு தேருமிறைபணிப்ப
வீமத்திடுங்காடு தான்.

(௨௨)

தானயன்மாலாகி நின்றான்றனித்துலகிற்
றானயன்மாலாய தன்மையான் - றானக்
கரைப்படுத்தானென்மறையைத் தண்புலித்தோலாடைக்
கரைப்படுத்தான்றன்பாதஞ் சார்.

(௨௩)

சாராவார்தாமுணரேற் சங்கரன்றன்மேனிமேற்
சாராவார்கங்கை யுமைமங்கை - சார்வா
யரவமதுசெஞ்சடைமே லக்கொன்றையொற்றி
யரவமதுசெஞ்சடையின் மேல்.

(௨௪)

மேலாயதேவர் வெருவவெழுநஞ்ச
மேலாயமின்றியே யுண்பொழுதின் - மேலாய
மங்கையுமைவந் தடுத்திலளேவாணாளு
மங்கையுமைவந் தடுத்து.

(௨௫)

அடுத்தபொன்னம்பலமே சார்வுமதனு
ளடுத்ததிருநட்ட மஃதே - யடுத்ததிரு
வாணைக்காவாடுவது மேலென்புபூண்பதுவு
மாணைக்காவான்ற னமைவு.

(௨௬)

அமைவும்பிறப்பு மிறப்புமாமற்றுங்
கமைவும்பரமான வாகி - யமையுந்
திருவாலவாய்சென்று சேராதுமாக்க
டிருவாலவாய்சென்று சேர்.

(௨௭)

சென்றுசெருப்புக்காலாற் செல்லமலர்நீக்கிச்
சென்றுதிருமுடிவாய் நீர்வார்த்துச் - சென்றுதன்
கண்ணிடந்தன்றப்புங் கருத்தற்குக்காட்டினான்
கண்ணிடந்தன்றப்பானமைப் பார்த்து. (உஅ)

பார்த்துப்பரியாதே பாஸீறுபூசாதே
பார்த்துப்பரிந்தங்கம் பூணாதே - பார்த்திட்
டுடையானைச்சேராதே பூணாரக்கைவிட்
டுடையானைச்சேராதா ரூன். (உகூ)

ஊனொன்றுமில்லை யுறக்கமில்லையுண்மாவி
ஊனொன்றுபேசுவார் சாந்திறந்தா - ரூனொன்றும்
விட்டானைவெள்ளி யூராந்தானைவெள்ளநீர்
விட்டானைபுன்சடைமேல் வேறு. (௩௦)

வேறணைப்பன்கேட்டருளும் வேதநான்காறங்கம்
வேறணைத்தமேனி விரிசடையான் - வேறணைத்து
பாதத்தாய்பைங்க ணைரஞூர்வாய்பாருரும்
பாதத்தாயென்று மலர். (௩௧)

மலரணைந்துகொண்டு மகிழ்வாயுன்பாத
மலரணைந்துமானயனை மாரு - மலரணைந்து
மன்சக்காம்வேண்ட வாளாவளித்தனையால்
வன்சக்கரம்பரனே வாய்த்து. (௩௨)

வாய்த்தவடியார் வணங்கமலரோன்மால்
வாய்த்தவடியுமுடி யுங்காணூர் - வாய்த்த
சலந்தரனைக்கொன்றிட்டுச் சங்கரனென்றே
சலந்தரனைப்பின்றவா தாம். (௩௩)

தாமென்னநாமென்ன வேறில்லைத்தந்தலிற்
றுமென்னைவேறுத் தனித்திருந்து - தாமென்
கழிப்பாலைசேருங் கறைமிடற்றரென்றே
கழிப்பாலைசேருங் கடன். (௩௪)

கடனாகக்கைதொழுமின் கைதொழவல்லீரேற்
கடனாகைக்காரோணமேயார் - கடநாக
மாளவுரித்தாடுவார் நம்மேலைவல்வினைநோய்
மாளவிரித்தாடுமால் வந்து. (௧௫)

வந்தார்வளைகழல்வார் வாடித்துகில்சோர்வார்
வந்தார்முலைமெலிவார் வார்குழல்கள் - வந்தார்
சரிதருவாரைங்கொன்றைத் தாராரைக்கண்டு
சரிதருவாரைங்கொன்றைத் தார். (௧௬)

தாரானெனிருஞ் சடைமுடியான்சங்கரனந்
தாரான்றசமுகனைத் தோளிறுத்துத் - தாராய
நாளுங்கொடுத்த வானவர்கடம்முன்னே
வாளுங்கொடுத்தான் மதித்து. (௧௭)

மதியாருஞ்செஞ்சடையான் வண்கொன்றைத்தாரான்
மதியாருமாலுடைய பாகன் - மதியாரு
மன்றுமலைசேரா ராரோடுங்கூடாதி
யன்றுமலைசேர்வ ராங். (௧௮)

ஆலநிழற்கீ ழிருப்பதுவுமாய்வருத
மாலமமுதுசெய்வ தாடுவதீ - யாலத்
துறையுடையானுழை யுரியுடையான்சோற்றுத்
துறையுடையான்சேராத சொல்லு. (௧௯)

சொல்லாயமின்றித் தொலைவின்றித்தூரெதிர்க்கட்
சொல்லாய்ப்பெருந்த சுடரொளியாய்ச் - சொல்லாய
வீரட்டத்தானை விரவார்புரமட்ட
வீரட்டத்தானை விரை. (௨0)

விரையாருமத்தம் விரகாகச்சூடி
விரையாரும்வெள்ளெலும்பு பூண்டு - விரையாரு
நஞ்சுண்டவாதி நலங்கழல்கள்சேராதார்
நஞ்சுண்டவாதி நலம். (௨௧)

நலம்பாயுமாக்க நலங்கொண்டலென்ற
னலம்பாயுமானன் குருவ - நலம்பாய்செய்
தார்த்தார்க்கு மண்ணுமலையாணிடந்
தார்த்தார்க்குமண்ணு மலை. (சஉ)

மலையார்கலையோட வாரோடக்கொங்கை
மலையார்கலைபோய்மா லானுண் - மலையார்
கலையுடையான்வானின் மதியுடையான்காவாத்
தலையுடையானென்றுதொழு தாள். (சங)

தாளார்கமல மலரோடுதண்மலருந்
தாளாரவேசொரிந்து தாமிருந்து - தாளார்
சிராமலையாய்சேமத் துணையேயென்றேத்துஞ்
சிராமலையார்சேமத்து ளார். (சச)

ஆர்துணையாவாங்கிருப்ப தம்பலவாவஞ்சலுமை
யார்துணையாவானை யுரிமூடி - யார்துணையாம்
பூவணத்தாய்பூதப் படையாளிபொங்கொளியாய்
பூவணத்தாயென்னின் புகல். (சரு)

புகலூருடையாய் பொறியரவம்பூணி
புகலூர்ப்புனற்சடையெம் பொன்னே - புகலூராய்
வெண்காடாவேலை விடமுண்டாய்வெள்ளேற்றாய்
வெண்காடாவென்பேனோ நான். (சசா)

நானுடையமாடேயென் ஞானச்சுடர்விளக்கே
நானுடையகுன்றமே நான்மறையாய் - நானுடைய
காடுடையாய்காலங்க ளானாய்கனலாடுங்
காடுடையாய்காலமா னாய். (சஎ)

ஆயன்றமர ரழியாவகைசெய்தா
யாயன்றமர ரழியாமை - யாயன்
றிருத்திறன்செங்கண் விடையூர்வான்மேனி
திருத்திறன்சேதுக் கரை. (சஅ)

கரையேனுமாதர் கருவானசேருக்
கரையேனுமாது களையாங் - கரையேனுங்
கோளிலியெம்மாதி குறிபரவவல்லையே
கோளிலியெம்மாதி குறி. (சகூ)

குறியார்மணிமிடற்றுக் கோலஞ்சேர்ஞானக்
குறியாகிநின்ற குணமே - குறியாகு
மாலங்காடெய்தா வடைவேன்மேலாடரவ
மாலங்காடெய்தா வடை. (ருo)

அடையும்படைமழுவுஞ் சூலமிலம்பங்கி
யடையுமிறப்பறுப்ப தாறு - லடைய
மறைக்காடுசேரு மணாளரென்பாற்சேரா
மறைக்காடுசேர்மக்க டாம். (ருக)

தாமேயவாறு சமயமுதற்பரமுந்
தாமேயவாறு தழைக்கின்றார் - தாமேற்
றழலுருவர்சங்கரவர் பொங்கரவம்பூண்ட
தழலுருவர்சங்கரரென் பார். (ருஉ)

பார்மேவுகின்ற பலருருவர்பண்டரங்கர்
பார்மேவுகின்ற படுதலையர் - பார்மேல்
வலஞ்சுழியைச்சேர்வர் மலரடிகள்சேர்வார்
வலஞ்சுழியைச்சேர்வாரு வார். (ருங)

வாரணிந்தகொங்கை யுமையாண்மணவாளா
வாரணிந்தகொன்றை மலர்சூடி - வாரணிந்த
செஞ்சடையாய்சீர்கொள் சிவலோகாசேயொளியாய்
செஞ்சடையாய்செல்ல நினை. (ருச)

நினைமால்கொண்டோடி நெறியானதேடி
நினைமாலேநெஞ்ச நினைய - நினைமால்கொண்
டோர்தேடியும்பரா லம்பரமாகாளாவென்
றூர்தேடியென்றுரைப்பா னூர். (ருரு)

ஊர்வதுவுமானே றுடைதலையிலுண்பதுவு
மூர்வதுவுமெல்லுரக மூடுவர்கொ - லூர்வதுவு
மேகம்பமென்று மிடைமருதைநேசத்தார்க்
கேகம்பமாய்நின்ற வேறு. (௫௬)

ஏறேயவாண்முதலே யேகம்பாவெம்பெருமா
னேறேறியூரு மெரியாடி - யேறேய
வாதிவிடங்காகாறை யண்டத்தாயம்மானே
யாதிவிடங்காவுமைகன் மாட்டு. (௫௭)

மாட்டும்பொருளை யுருவைவருகாலம்
வாட்டும்பொருளாய் மறையானை - வாட்டி
முருவானைச்சோதி யுமைபங்காபங்கா
யுருவானசோதி யுரை. (௫௮)

உரையாயிருப்பதுவு முன்னைவெறுநீ
னுரையாயுயிராய்ப் பொலிந்தா - யுரையாய
வம்பொனேசோதி யணியாரூர்சேர்கின்ற
வம்பொனேசோதியே யாய்ந்து. (௫௯)

ஆய்ந்துன்றனபாத மடையவருமென்மே
லாய்ந்தென்றன்பாச மலமறுத் - தாய்ந்துன்றன்
பாலணையச்செய்த பரமாபரமேட்டி
பாலணையச்செய்த பரம். (௬௦)

பரமாயபைங்கட் கிரமேயப்பூண்ட
பரமாயபைங்கட் கிரமே - பரமாய
வாறடைந்தசெஞ்சடையா மைந்தடைந்தமேனியா
யாறடைந்தசெஞ்சடையா யன்பு. (௬௧)

அன்பேயுடைய வரனேயனையாத
வன்பேயுடைய வணலாடி - யன்பே
கழுமலத்துளாடுங் கரியுரிபோர்த்தானே
கழுமலத்துளாடுங் கரி. (௬௨)

கரியார்தாஞ்சேருங் கலைமறிகைக்கொண்டே
கரியார்தாஞ்சேருங் கவாலி - கரியாகி
நின்றகழிப்பாலை சேரும்பிரானை
நின்றகழிப்பாலை சேர். (௬௩)

சேரும்பிரானைமஞ் சிந்திக்கவல்லீரேற்
சேரும்பிரானைமஞ் சிந்திக்கச் - சேரு
மலையான்மகளை மகிழ்ந்தாரூர்நின்றான்
மலையான்மகளை மகிழ்ந்து. (௬௪)

மகிழ்ந்தன்பர்மாகாளஞ் செய்யுமகளிர்
மகிழ்ந்தம்பரமாகி நின்றார் - மகிழ்ந்தங்க
மொன்றாகி நின்ற வுமைபங்கனொற்றியூ
ரொன்றாகி நின்ற வுமை. (௬௫)

உமைகங்கையென்றிருவ ருற்றவுணர்வு
முமைகங்கையென்றிருவர் காணா - ருமைகங்கை
கார்மிடற்றம்மேனிக் கதிர்முடியான்கண்மூன்று
கார்மிடற்றம்மேனிக் கினி. (௬௬)

இனியவாகாணீர்க ளிப்பிறவியெல்லா
மினியவாவாகாமை யற்று - மினியவா
றாக்கைபலசெய்த வாமாத்தூரம்மானை
யாக்கைபலசெய்த வன்று. (௬௭)

அன்றமரருய்ய வமிர்தமவர்க்கருளி
யன்றவுணர்வீட வருள்செய்தோ - னன்றவுணர்
சேராமனின்ற வடிகளடியார்க்குச்
சேராமனின்ற சிவம். (௬௮)

சிவனந்தஞ்செல்கதிக்கோர் கண்சேர்வதாக்குஞ்
சிவனந்தஞ்செல்கதிக்கோர் கண்ணாஞ் - சிவனந்தஞ்
சேருமுருவுடையீர் செங்காட்டங்குடிமேற்
சேருமுருவுடையீர் செல். (௬௯)

செல்லுமளவுஞ் சிதையாமற்சிந்திமின்
செல்லுமளவுஞ் சிவனும்மைச் - செல்லுந்
திருமீச்சூர்க்கேறவே செங்கணேறூருந்
திருமீச்சூரீசன் றிறம். (எ0)

திறமென்னுஞ்சிந்தை தெரிந்தும்மைக்காணுந்
திறமென்னுஞ்சிந்தைக்கு மாமே - திறமென்னுஞ்
சித்தத்திர்செல்வத் திருக்கடவூர்சேர்கின்ற
சித்தத்திரேசெல்லு நீர். (எக)

நீரேயெருதேறு நின்மலனூராவிரு
நீரேநெடுவானி னின்றீரு - நீரே
நெருப்பாயதோற்றத்து நீளாறும்பூண்டு
நெருப்பாயதோற்ற நிலைத்து. (எஉ)

நிலைத்திவ்வுலகனைத்து நீரேயாய்நின்றீர்
நிலைத்திவ்வுலகனைத்து நீரே - நிலைத்திரக்
கானப்பேரீர்கங்கை சூடினீர்கங்காளீர்
கானப்பேரீர்கங்கை யீர். (எங)

ஈரமுடைய விளமதியஞ்சூடினீ
ரீரமுடைய சடையினீ - ரீர
வருங்காலமாயினீ ரிவ்வுலகமெல்லாம்
வருங்காலமாயினீர் வாழ்வு. (எச)

வாழ்வார்மலரணைவார் வந்தவருநாகம்
வாழ்வார்மலரணைவார் வண்கங்கை - வாழ்வாய
தியாடவானுள்வான் வான்கழல்கள்சேராதார்
தியாடவானுளு மாறு. (எரு)

மாறுதவானையின்றோல் போர்த்துவளர்சடைமேன்
மாறுதநீருடைய மாகாளர் - மாறு
விடுங்கையர்சேரு மெழிலவாய்முன்னே
விடுங்கையர்சேர்வாக வீ. (எசு)

ஈயும்பொருளே யெமக்குச்சிவலோக
மீயும்பொருளே யிடுகாட்டி - னீயும்
படநாகம்பூணும் பரலோகீரென்னீர்
படநாகம்பூணும் படி. (எஎ)

படியேறும்பார்த்துப் பரத்தோடுங்கூட்டிப்
படியேறும்பார்த்துப் பரனைப் - படியேனைப்
பாருடையாய்பைங்கண் புலியதளாய்பானீற்றாய்
பாருடையாயானுன் பரம். (எஅ)

பரமாயவிட்டுநின் பாதம்பணிந்தேன்
பரமாயவாதிப் பரனே - பரமாய
நீதியேநின்மலனே நேரார்புரமூன்று
நீதியேசெய்தாய் நினை. (எகூ)

நினையடைந்தேன்சித்த நிலையாகும்வண்ண
நினையடைந்தேன்சித்த நிமலா - நினையடைந்தேன்
கண்டத்தாய்காளத்தி யானேகனலாருங்
கண்டத்தாய்காவாலி கா. (அ0)

காவார்பொழிற்கயிலை யாதிகருவேயெங்
காவாய்ப்பொலிந்த கடுவெளியே - காவாய
வேறுடையாயென்னை யிடைமருதிலேயென்று
மேறுடையாய்நீயே கரி. (அக)

கரியானுநான்முகனு மாய்நின்றகண்ணன்
கரியாருங்கூற்றங் கனியே - கரியாருங்
காடுடையாய்காலங்க ளானாய்கனலாடுங்
காடுடையாய்காலமா னாய். (அ௨)

ஆனாயனாய வடலேறேயாரூர்க்கோ
னானாயனாவமுத மேயானாய் - யானாய்
கவரேலும்போடேந்தி கதநாகம்பூணி
கவரேலும்புதார்கை வளை. (அ௩)

வளைகொண்டாயென்னை மட்வார்கண்முன்னே
வளைகொண்டாய்மாசற்ற சோதி - வளைகொண்டாய்
மாற்றார்கதுவ மதிலாரூர்சேர்கின்ற
மாற்றூரூர்கின்ற மயல். (அச)

மயலானதீரு மருந்தாகுமற்று
மயலானாரூர் மயரார் - மயலான
கண்ணியர்தம்பாகா கனியேகடிக்கொன்றைக்
கண்ணியலான்பாதமே கல். (அரு)

கலைமான்கையேனப்பூண் காண்கயிலைமானின்
கலைமான்கறைகாண் கவாலி - கலைமானே
யாடுவதும்பாடுவதுங் காலனைப்பொன்னம்பலத்து
ளாடுவதுமாடா னரன். (அசா)

அரனேயணியாரூர் மூலட்டத்தானே
யரனேயடைந்தார்தம் பாவ - மரனே
யயனார்தமங்க மடையாகக்கொண்டா
யயனாகமாக வடை. (அஎ)

அடையுந்திசையீசன் றிண்டோளாகாச
மடையுந்திருமேனி யண்ட - மடையுந்
திருமுடிகால்பாதாள மாடைகடலங்கி
திருமுடிநீர்கண்கள்சுடர் மூன்று. (அஅ)

மூன்றரணமெய்தானே மூலத்தனிச்சுடரே
மூன்றரணமாய்நின்ற முக்கணனே - மூன்றரண
மாய்நின்றசோதி யணியாரூர்சேர்கின்ற
வாய்நின்றசோதி யறம். (அகூ)

அறமாய்வீரேனு மடுகாடுசேர
வறமானாரங்க மணிவ - ரறமாய
வல்வினைகள்வாரா வெனுமருகலாரென்ன
வல்வினைகள்வாராத வாறு. (கூ0)

ஆறுடையர்நஞ்சுடைய ராடுமரவுடைய
ராறுடையர்கால மமைவுடைய - ராறுடைய
சித்தத்தீர்செல்வத் திருக்கயிலைசேர்கின்ற
சித்தத்தீரெல்லார்க்குஞ் சேர்வு. (கக)

சேர்வுமுடையர் செழுங்கொன்றைத்தாரார்நஞ்
சேர்வுமுடைய ரரவுடையர் - சேருந்
திருச்சாய்க்கட்டாடுவரேற் செய்தக்கவென்றுந்
திருச்சாக்காட்டேகின் னுருவு. (கஉ)

உருவுபலகொண் டொருவராய்நின்று
ருருவுபலவா மொருவ - ருருவு
பலவல்லவொன்றல்ல பைஞ்ஞீலிமேயார்
பலவல்லவொன்றுப் பகர். (கங)

பகரப்பரியானை மேலூராதானைப்
பகரப்பரிசடைமேல் வைத்த - பகரப்
பரியானைச்சேருலகம் பல்லுயிர்களெல்லாம்
பரியானைச்சேருலகம் பண். (கச)

பண்ணுகப்பாடிப் பலிகொண்டாய்பாரேழும்
பண்ணுகச்செய்த பரஞ்சோதீ - பண்ணு
வெருதேறியூர்வா யெழில்வஞ்சியெங்க
ளொருதேறியூர்வா யிடம். (கரு)

இடமாயவெவ்வுயிர்க்கு மேகம்பமேயா
ரிடமானுர்க்கீந்த விறைவ - ரிடமாய
வீங்கோய்மலையா ரெழிலார்சிராமலையா
ரீங்கோய்மலையா ரெமை. (கசு)

எமையாளவந்தா ரிடரானதீர
வெமையாளுமெம்மையிமையோ - ரெமையாளும்
வீதிவிடங்கர்விடம துண்டகண்டர்விடையூர்
வீதிவிடங்கர்விடையூர் தி. (கஎ)

தீயானமேனியனே செம்பவளக்குன்றமே
தீயானசேராமற் செய்வானே - தீயான
செம்பொற்புரிசைத் திருவாரூராயென்னைச்
செம்பொற்சிவலோகஞ் சேர். (கூஅ)

சேர்கின்றசிந்தை சிதையாமற்செய்வானே
சேர்கின்றசிந்தை சிதையாமற் - சேர்கின்றா
மொற்றியூரானே யுறவாருமில்லையினி
யொற்றியூரானே யுறும். (கூகூ)

உறுமுந்தமுன்னே யுடையாமலின்ன
முறுமுந்தமுன்னே யுடையாம - லுறுமுந்த
மோரைந்துரைத்துற் றுணர்வோடிருந்தொன்றை
யோரைந்துரைக்கவல்லார்க் கொன்று. (க00)

ஒன்றைப்பரண ருரைத்தவந்தாதிபல
வொன்றைப்பகரி லொருகோடி - யொன்றைத்
தவிராதுரைப்பார் தளராருலகிற்
றவிரார்சிவலோகந் தான்.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

இளம்பெருமானடிகள்

அருளிச்செய்த

# சிவபெருமான்றிருமும்மணிக்கோவை.

---

## அகவல்.

முதல்வன்வகுத்த மதலைமாடத்
திடவரையூன்றிய கடவுட்பாண்டிற்
பள்ளிச்செம்புய லுள்விழுதுநீஇப்
புத்தேணிவந்த முத்தமாச்சுட
ரெறிவளிபெடுப்பினுஞ் சிறுநடுக்குறுநின்
னடிநிழலளியவோ வைத்தமுடிமிசை
யிலங்குவளைத்தனிப் போதுவிரித்த
வலங்குகதிரொலியனீ யணிந்ததென்மாறே. (க)

## வெண்பா.

மாறுதடுத்த மணிக்கங்கைதிங்களின்
கீறுதடுப்பக் கிடக்குமே - நீறடுத்த
செந்தாழ்வரையின் றிரள்போற்றிருமேனி
யெந்தாய்நின்சென்னி யிடை. (உ)

## கட்டளைக்கலித்துறை.

இடைதரில்யாமொன்றுணர்த்துவதுண்டிடையோர்சிமையத்
தடைதருமூரிமந்தாரம்விராய்நதிவெண்ணிலவின்
றுடைதருதுண்டங்கிடத்தினுந்தொண்டரொதுக்கியிட்ட
புடைதருபுல்லெருக்குஞ்செல்லுமோநின்புரிசடைக்கே. (ங)

## அகவல்.

சடையே, நீரகந்ததும்பி நெருப்புக்கலிக்குமே
மிடறே, நஞ்சகந்துவன்றி யமிர்துபிலிற்றுமே

வடிவே, முள்ளெயிறுகவைஇத் தளிர்தயங்கும்மே
யடியே, மடங்கன்மதஞ்சிறி மலர்பழிக்கும்மே
யவைதான், றிணையவென்றறிகிலம் யாமேமுழுதவத்
தலைமூன்றுவகுத்த தனித்தாட்
கொலையூன்றுகுடுமி நெடுவேலோயே. (௪)

வெண்பா.

வேலைமுகடும் விசும்பகடுங்கைகலந்த
காலைநீரெங்கே கரந்தனையான் - மாலைப்
பிறைக்கீறுகண்ணுதலா பெண்பாகாவையோ
விறைக்கூறுயெங்கட் கிது. (௫)

கட்டளைக்கலித்துறை.

இதுநீரொழியினிடைதந்துமையிமையத்தரசி
புதுநீர்மணத்தும்புலியதளேயுடைபொங்குகங்கை
முதுநீர்கொழித்தவிளமணன்முன்றின்மென்மேட்டதிங்கட்
செதுநீர்ததும்பத்திவளஞ்செய்செஞ்சடைத்தீவண்ணனே. (௬)

அகவல்.

வண்ண, மைஞ்சுதலைகவைஇப் பவளமால்வரை
மஞ்சுமிவிலகிப் பகல்செகுக்கும்மே
யென்னைப், பழமுடைச்சிறுகலத் திடுபலிபெய்வோ
ரெஞ்சகம்பிணிக்கும் வஞ்சமோவுடைத்தே
யவைதான்று, முளையெயிற்றுக்குருளை யின்றுயிலெடுப்ப
நடுங்குதலைச்சிறுநிலா விதிர்க்குங்கொடும்பிறைத்
தேமுறுமுதிர்ச்சடை யிறைவ
மாமுறுகொள்கை மாயமோவுடைத்தே. (௭)

வெண்பா.

உடைதலையின்கோவை யொருவடமோகொங்கை
புடைமலிந்தவெள்ளெருக்கம் போதோ - சடைமுடிமேன்
முன்னநாள்பூத்த முகிணிலவோமுக்கணு
வின்னநாள்கண்ட திவள். (அ)

## கட்டளைக்கலித்துறை.

இவளப்பனிமாலிமையத்தணங்குகற்றைச்சடைமே
லவளப்புத்தேளிருலகிற்கரசியதுகொண்டென்னை
யெவளுக்குநீநல்லதியாரைமுன்னெய்திற்றெற்றேயிதுகா
தவளப்பொடிச்செக்கர்மேனிமுக்கண்ணுடைச்சங்கரனே. (க)

## அகவல்.

கரதலநுழைத்த மரகதக்கபாடத்
தயில்வழங்குகுடுமிக் கயிலைநாடநின்
னணங்குதுயிலெடுப்பிற் பிணங்குகிலாப்பிணையல்
யாமேகண்டனு மிலமேதாமா
மூவாவெஃகமு முரணு
மோவாதுபயிற்று முலகமாளுளாதே. (க0)

## வெண்பா.

உளரொளியகங்கை யொலிதிரைகண்மோத
வளரொளிதேய்ந்துள்வளைந்த தொக்கும் - கிளரொளிய
பேதைக்கருங்கட் பிணவின்மணாளனார்
கோதைப்பிறையின் கொழுந்து. (கக)

## கட்டளைக்கலித்துறை.

கொழுந்திரட்டெண்ணிலவஞ்சிகின்கூரிருள்வார்பனிங்கின்
செழுந்திரட்குன்றகஞ்சென்றடைந்தாலொக்குந்தெவ்வர்நெஞ்
சழுந்திரட்கண்டத்தவளப்பொடிச்செக்கர்மேனிநின்றே [சுத்
ரெழுந்திரட்சோதிப்பிழம்புமென்னுள்ளத்திடங்கொண்டவே.

## அகவல்.

கொண்டற்காரெயிற்றுச் செம்மருப்பிருலின்
புண்படுசிமையத்துப் புலவுநாறுகுடுமி
வரையோன்மருக புனலாள்கொழுந
விளையோன்றுதை முதுகாட்டுப்பொருநநின்
னீறுபொலங்கழல் பரவ
வேறுங்குகவர்க்குமோ வீடுதருநெறியே. (கந)

வெண்பா.

நெறிவிரவுகொன்றை நெடும்படற்கீழ்க்கங்கை
யெறிதிரைகளீர்த்தெற்ற வேறிப் - பொறிபிதிர
வீற்றராக்கண்படுக்கு மிண்டைச்சடைச்செங்க
ணேற்றராற் றீருமிடர். (கச)

கட்டளைக்கலித்துறை.

இடர்தருதீவினைக்கெள்கிளைவார்க்குநின்னீரடியின்
புடைதருதாமரைப்போதுகொலாஞ்சரண்போழருவிப்
படர்தருகொம்மைப்பவளவண்ணபெருமாமுதையங்
கடைதருசெஞ்சுடர்க்கற்றையொக்குஞ்சடையந்தணனே. கரு

அகவல்.

அந்தணாளர் செந்தொடையொழுக்கமு
மடலோர்பயிற்றுநின் சுடர்மொழியாண்மையு
மவுணர்நன்னாட் டிறைவனாகிக்
குறுநெடுந்தானை பரப்பித்தருகண்
மால்விடையடரத் தாணிமிர்ந்துக்க
காய்சினவரவுநாண் பற்றிதீயோர்
நெடுவரைநெளிய வாங்கிச்
சுடுகணையெரிதிமிர்த்துந் துரந்தனன்றே. (கசு)

வெண்பா.

ஞான்றபுனமாலை தோளலைப்பநாண்மதிய
மீன்றநிலவோடு மிவ்வருவான் - மூன்றியங்கு
மூதூர்வியன்மாட முன்னொருகாற்றுன்னருந்தீ
மீதூரக்கண்சிவந்த வேந்து. (கஎ)

கட்டளைக்கலித்துறை.

வேந்துக்கமாக்கடற்சூரன்முன்னாள்பட வென்றிகொண்ட
சேந்தற்குத்தாதையில்லையமலர்ந்தெய்வத்திகிரி
யேந்தற்குமைத்துனத்தோழரின்றேன்மொழிவள்ளியென்னுங்
கூந்தற்கொடிச்சிதன்மாமன்வெம்மால்விடைக்கொற்றவனே.

## அகவல்.

கொற்றத் துப்பி லொற்றையின்ற
சுணங்கையஞ்செல்வத் தணங்குதரும்முதுகாட்டுப்
பேய்முதிராயத்துப் பிணவின்கொழுநநின்
றோர்கழல்கவைஇ யிலங்கிதழ்த்தாமந்
தவழ்தருபுனறலைப் படுந
ரவலமாக்கட லழுந்தலோவிலரே. (கக)

## வெண்பா.

இலர்கொலாமென்றிளைஞ ரேசப்பலிக்கென்
றுலகெலாஞ்சென்றுழல்வ ரேனு - மலர்குலாந்
திங்கட்குறுந்தெரியற் றேவர்க்காட்செய்வதே
யெங்கட்குறுந்தெரியி னீண்டு. (உ0)

## கட்டளைக்கலித்துறை.

ஈண்டுமுற்றத்தொற்றைமால்விடையேறியையம்முனைநாள்
வேண்டிமுற்றத்திரிந்தெங்கும்பெறுதுவெறுங்கைவந்தார்
பூண்டவொற்றைச்செங்கணாமுங்கற்றைச்சடைப்புனலு
நீண்டவொற்றைப்பிறைக்கீளுமெப்போதுமென்னெஞ்சத்தவே

## அகவல்.

நெஞ்சிற்கொண்ட வஞ்சமோவுடைத்தே
மடவோர்விரும்புநின் விளையாட்டியல்போ
மருள்புரிகொள்கைநின் றெருளாமையோ
யாதாகியதோ வெந்தைநீதியென்
றுடைதலைநெடுநிலா வெறியல்
கடைதலென்றருளி சூடியபொருளே. (உஉ)

## வெண்பா.

பொருளாகயானிரந்தாற் புல்லெருக்கின்போது
மருளான்மற்றல்லாதார் வேண்டிற் - றெருளாத
பான்மருமான்மறிக்கைப் பைங்கட்பகடுரியான்
முன்மருன்பைங்கொன்றைத் தார். (உங)

## கட்டளைக்கலித்துறை.

தாரிளங்கொன்றைநல்லேறுகடாவித்தலைமைமிக்க
வேரிளமென்முலைப்பொன்மலையாட்டிக்கேற்றேயவனோர்
பேரிளங்கொங்கைப்பிணாவொடுங்கூடிப்பிறைக்கொழுந்தி
னோரிளந்துண்டஞ்சுமந்தையம்வேண்டியுழிதருமே. (௨௪)

## அகவல்.

உழிதரன்மடிந்து கழுதுகண்படுக்கு
மிடருறுமுதுகாட்டுச் சீரியல்பெரும்
புகர்முகத்துளக்கை யுரவோன்றந்தை
நெடியோன்பாகநின் சுடர்மொழியாண்மை
பயிற்றுநாவலர்க்
கிடர்தருதீவினை கெடுத்தலோவெளிதே. (௨௫)

## வெண்பா.

எளியமென்றெள்கி யிகழாதுநாளு
மளியமாட்செய்தாலு மையோ - தெளிவரிய
வள்கயிலைநீள்பொருப்ப வான்றோய்மதிச்சடையாய்
கொள்கையிலையெம்மாற் குறை. (௨௬)

## கட்டளைக்கலித்துறை.

குறையாப்பலியிவைகொள்கவென்கோல்வளையுங்கலையுந் [வித்
திறையாக்கொண்டாயினிச்செய்வதென்றெய் வக்கங்கைப்புன
பொறைபாயொருகடனஞ்சுண்டகண்டாபொடியணிந்த
விறையாவிடுபிணக்காடசெம்மேனியெம்வேதியனே. (௨௭)

## அகவல்.

வேதியர்பெரும விண்ணோர்தலைவ
வாதிநான்முகத் தண்டவாண
செக்கர்நான்மறைப் புத்தேளுட
காய்சினமழவிடைப் பாகநின்
மூவிலைநெடுவேல் பாடுது
நாவலம்பெருமை நல்குவோயெனவே. (௨௮)

## வெண்பா.

எனவேயுலகெலா மென்றிளைஞரேச
நனவேபலிதிரிதி நாளுஞ் - சினவேங்கைக்
கார்க்கயிலைநாட களிற்றீருரியலாற்
போர்க்கையிலைபேசனீ பொய். (௨௯)

## கட்டளைக்கலித்துறை.

பொய்யீருரைசெய்தீர்பொய்யோம்பலியெனப்போனபின்னை
யிந்நீள்கடைக்கென் றுவந்தறியீரினிச்செய்வதென்னே
செந்நீர்வளர்சடைத்திங்கட்பிளவொடுகங்கைவைத்த
மூந்நீர்ப்பவளத்திரட்செக்கரொக்குமுதல்வனே. (௩௦)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

அதிராவடிகள்

அருளிச்செய்த

# மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை.

---

அகவல்.

ஒருநெடுங்கங்கை யிருங்குறும்பைம்புகர்
மும்முகச்செந்தீ நாவிணர்வெண்ணிணக்
குடற்புலவுகமழு மடற்கழுப்படையவன்
மதலைமாமதந் துவன்றியகதுவுடைக்
கடதடக்கபோலத் தோரிடமருப்பிற்
கரண்டகவுதாரத் துரண்டருருமிதன்
சேவடியுகள மல்ல
தியாவையுமிலமினி யிருநிலத்திடையே. (௧)

வெண்பா.

நிலந்துளங்கமேருத் துளங்கநெடுவான்
றலந்துளங்கச்சப்பாணி கொட்டும் - கலந்துளங்கொள்
காமாரியீன்ற கருங்கைக்கடதடத்து
மாமாரியீன்ற மணி. (௨)

கட்டளைக்கலித்துறை.

மணிசிந்துகங்கைதன்மானக்குருளையைவாளரக்க
ரணிசிந்தவென்றவெம்மையர்க்கிளங்கன்றையங்கரும்பின்
றுணிசிந்தவாய்ப்பெய்தபேரிகத்தைத் தொடர்ந்தோர்பிறவிப்
பிணிசிந்துகார்முளையைப்பிடித்தோர்க்கில்லைபேதுறவே. (௩)

அகவல்.

பேதுறுதகைய மல்லதுதீதறச்
செக்கர்க்குஞ்சிக் கருநிறத்தொக்கறுப்பண்

புக்கவணிரும்பொறித் தடக்கையு
முரணிய பெருந்தோட்
கொட்டநாவி தேவிதன்
மட்டுகுதெரிய லடிமணந்தனமே. (௪)

வெண்பா.

மேயவுருமிடற்றர் வெள்ளெயிற்றர் திண்சேனை
யோயமணிபூச லாடின்றே - பாய
மழைசெவிக்காற்றுந்திய வாளமர்க்கணைந்தை
தழைசெவிக்காற்றுந்தத் தளர்ந்து. (௫)

கட்டளைக்கலித்துறை.

உந்தத்தளராவளைத்தனமுன்னமின்றுடைநெற்றிச்
சந்தத்தளராவொருதனித்தெவ்வர்தந்தாளிரியூர்
விந்தத்தளராமருங்கிற்கிளிபெற்றவேழக்கன்றின்
மந்தத்தளராமலர்ச்சரணங்கள்வழுத்துமின்னே. (௬)

அகவல்.

மின்னெடுங்கொண்ட லந்நெடுமுழக்கத்
தோவறவிளங்கிய துளைக்கைக்கடவுளை
யாமிகவழுத்துவ தெவனோவவனேற்
பிறந்ததிவ்வுலகின் பெருமூதாதை
யுரந்தருசிரமரிந் தவற்கேவரைந்தது
மேருச்சிமையத்து மீமிசை
வாரிச்செல்வன் மகன்மகன்மொழியே. (௭)

வெண்பா.

மொழியின்மறைமுதலே முன்னயனத்தேறே
கழியவருபொருளே கண்ணே - தெழிய
கலாலயனேயெங்கள் கணபதியேநின்னை
யலாலதையனேசூழாதென் னன்பு. (௮)

கட்டளைக்கலித்துறை.

அன்புதவச்சுற்றகாரழல்கொண்டெயின்மூன்றெரிய
வன்புதவந்துந்தைமாட்டுகின்றுன்மதஞ்சூழ்மருப்பிற்
கன்புதவக்கரத்தாளமிட்டோடிக்கடுநடையிட்
டின்புதவச்சென்றுநீயன்றுகாத்ததியம்புகவே. (௯)

அகவல்.

கவவுமணிக்கேடகக் கங்கணக்கவைவரு
வறைகழலவுணரொடு பொருதஞான்றுகீற்
புழைக்கரமுயிர்த்த வழற்பேருதை
விரைநனி கீறிமுரி
யஞ்சேறுபுலர்த்து மென்பர்
மஞ்சேறுகயிலை மலைகிழவோயே. (௧௦)

வெண்பா.

மலைசூழ்ந்திழிகின்ற மாசுணப்பொற்பாறை
நிலைசூழ்ந்துதானிளைப்ப தொக்குங் - கலைசூழ்
திரண்டகங்கொள்போறிவன் றிண்வயிற்றினும்பர்க்
கரண்டகங்கொள்காலுயிர்க்குங் கை. (௧௧)

கட்டளைக்கலித்துறை.

காலதுகையதுகண்ணதூறியதுகார்மதநீர்
மேலதுகீழதுநூலதுவெற்பதுபொற்பமைதீம்
பாலதுதேனதுதானதுமென்மொழிப்பாவைமுப்பூண்
வேலதுவாளதுநான்மறைக்கின்றவிடுசுடர்க்கே. (௧௨)

அகவல்.

சுடர்ப்பிழம்புநுழைத்த வழற்றணிநெடுவேற்
சேய்மூவுலகம் வலம்வரவேய
கொன்றையம்படலைத் துன்றுசடைக்கடிந்து
வோங்கிருந்தாதையை வளாய்மாங்கனி
யள்ளூற்றீஞ்சுவை யருந்திய
வள்ளற்கிங்கென் மனங்கனிந்திடுமே. (௧௩)

வெண்பா.

இக்கயங்கொண்மூவையஞ் சூழேழ்நடவரைக
டிக்கயங்கள்பேர்ந்தாடச் செங்கீரை - புக்கியங்கு
தேனூடவண்டாடச் செங்கீரையாடின்றே
வானூடன்பெற்ற வரை. (௧௪)

### கட்டளைக்கலித்துறை.

பெற்றமெல்லோதிசிலம்பின்மகள்பெறப்பிச்சுகந்த
மற்றவள்பிச்சன்மயங்கன்முன்னோன்பின்னிணைமைமிகக்
கற்றவனையன்புறங்காட்டிடைநடமாட்டுகந்தோ
செற்றவெண்டந்தத்தவனம்மையாட்கொண்டுசெய்தனவே. ()

### அகவல்.

செய்தருபொலம்படை மொய்தருபருஉக்
குருளை, வெள்ளெயிறுபொதிந்த வள்ளுகிர்த்திரள்வாய்ப்
பெருந்திரட் புழைக்கை
மன்முழைவழங்குந் திண்முரணேற்றின்
பனையடர்ப்பாகன் றனதிணையடி
நெடும்பொற்சரண மேத்த
விடும்பைப்பௌவ மினிநீங்கலமே. (கரு)

### வெண்பா.

அலங்கன்மணிகனக மூந்தியருவி
விலங்கன்மிசையிழிவ தொக்கும் - பலன்கனிக
ளுண்டளைந்தகோன்மகுடத் தொண்கடுக்கைத்தாதளைந்து
வண்டணைந்துசோரு மதம். (கஎ)

### கட்டளைக்கலித்துறை.

மதந்தந்தமென்மொழிமாமலையாட்டிமடங்கல்கொன்ற
மதந்தந்தமுக்கண்ணரற்குமுன்னின்றவம்மாமலைபோன்
மதந்தந்தகும்பக்குழவிமந்தாரப்பொன்னூட்டிருந்து
மதந்தந்தசெம்மலன்றேவையமுய்யவளர்கின்றதே. (கஅ)

### அகவல்.

வளர்தருகவட்டின் இளரொளிக்கற்பகப்
பொதும்பர்த்தும்பி யொழிவின்றேச்சும்
பாரிடைக்குறுங்கைத் தோடிஞாங்க
ரிட்ட மாங்கனி
முழுவதும்விழுங்கிய் முளைப்பணைத்தடக்கை
யெந்தையல்லதுமற் றியாவுள
சிந்தைசெய்யுந் தேவதைநமக்கே. (க௯)

வெண்பா.

கேளுற்றியான்றளர வொட்டுமேகிம்புரிப்பூண்
வாளுற்றகேயூர வாளரக்கர் - தோளுற்
றறித்தெறிந்துகொன்றழித்த வங்கயங்கண்மீண்டே
யிறுத்தெறிந்துகொன்றழித்த வேறு. (௨0)

கட்டளைக்கலித்துறை.

ஏறுதழீஇயவெம்புத்தேண்மருகவெங்குந்தவள
நீறுதழீஇயவெண்டோள்வன்செல்வவண்டுணைநெக்க
வாறுதழீஇயகரதலத்தையநின்றனையல்லால்
வேறுதழீஇத்தொழுமோவணங்காதவியன்சிரமே. (௨௧)

அகவல்.

சிரமே, விசும்புபோதவுயரியிரண் டசும்புபொழியும்மே
கரமே, வரைத்திரண்முரணிய விரைத்தாவிழும்மே
புயமே, திசைவிளிம்புகிழியச் சென்றுசெறிக்கும்மே
யடியே, யிடுந்தொறுமிடுந்தொறுமிவ்வுல கம்பெயரும்மே
யாயினு, மஞ்சுடர்ப்பிழம்பு தழீஇ
நெஞ்சகத்தொடுங்குமோ நெடும்பனைச்சூரே. (௨௨)

வெண்பா.

சூர்தந்தபொற்குவட்டின் சூளிகையின்வானயிர்த்து
வார்தந்தெழுமதிய மன்னுமே - சீர்தந்த
மாமதலைவான்மதியங் கொம்புவயிறுதித்த
கோமதலைவாண்மதியங் கொம்பு. (௨௩)

(௨௪) (௨௫) (௨௬) (௨௭) (௨௮) (௨௯) (௩0)

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# கோயினான்மணிமாலை.

---

வெண்பா.

பூமேலயனறியா மோலிப்புறத்ததே
நாமேபுகழ்ந் தளவை நாட்டுவோம் - பாமேவு
மேத்துகந்தான் றில்லை யிடத்துகந்தானம்பலத்தே
கூத்துகந்தான்கொற்றக் குடை. (க)

கட்டளைக்கலித்துறை.

குடைகொண்டிவ் வையமெலாங்குளிர்வித் தெரிபொற்றி
கிரிப், படைகொண் டிகறெறும்பார்த்திவ ராவதிற் பைம்பொ
ற்கொன்றைத், தொடைகொண்டவார்சடையம்பலத்தான்றொ
ண்டர்க்கேவல்செய்து, கடைகொண்டபிச்சைகொண்டுண்டிங்
குவாழ்தல்களிப்புடைத்தே. (உ)

ஆசிரியவிருத்தம்.

களிவந்தமுதூறிக் கன்மனத்தையெல்லாங்
கசியும்படிசெய்து கண்டறிவாரில்லா
வெளிவந்தடியேன் மனம்புகுந்ததென்றால்
விரிசடையும்வெண்ணீறுஞ் செவ்வானமென்ன
வொளிவந்தபொன்னிறமுந் தொண்ணடமுங்காட்டு
முடையானுயர்தில்லை யம்பலமொன்றல்லா
லெளிவந்தினிப்பிறர்பாற் சென்றவர்க்குப்பொய்கொண்
டிடைமிடைந்தபுன்மொழியா லிச்சையுரையேமே. (ங)

## இணைக்குறளாசிரியப்பா.

உரையின்வரையும் பொருளினளவு
மிருவகைப்பட்ட வெல்லையுங்கடந்து
தம்மைமறந்து நின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந் தில்லைமன்றினுநட
மாடுமம்பல வாணநீடு
குன்றக்கோமான் றன்றிருப்பாவையை
நீலமேனி மாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்த ஞான்றுபெருமகிழ்
முதவிழ்கொன்றைத் தாருமேதகவில்
வீரவெள்விடைக் கொடியும்போரிற்
றழங்குந்தமருகப் பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கை யாறும்பொய்தீர்
விரையாக்கலியெனு மாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்த மாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண் வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும் வானநாடு
மையறுகனக மேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லை யாகியதொல்பெரும் பதியுமென்
னொருபதினாயிரந் திருநெடுநாமமு
முரிமையிற்பாடித் திருமணப்பந்த
ளமரர்முன்புகுந் தறுகுசாத்திநின்
றமர்பெயரெழுதிய வரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுத வேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற் காரொறுவனவும்
வானுறநிமிர்ந்து காட்டுங்
காணில்வாணுளம்புய் கருடறுதவினே. (௯)

### வெண்பா.

ஆதரித்தமாலு மறிந்திலனென் றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங் காட்டுமே - போதகத்தோற்
கம்பலத்தானீறுக ங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி. (௰)

## கட்டளைக்கலித்துறை.

அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதிப்பான், முடியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்தனுமுற்றும்வெள்ளைப், பொடியொன்றுதோளெட்டுத் திக்கின்புறத்தனபூங்கரும்பின் செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன் றிருநடமே. (சுா).

## ஆசிரியவிருத்தம்.

நடமாடியேழுலகு முய்யக்கொண்ட
நாயகரேநான்மறையோர் தங்களோடுந்
திடமாடமதிற்றில்லைக் கோயில்கொண்ட
செல்வரேயுமதருமை தேராவிட்ட
ரிடமாடியிருந்தவளும் விலக்காவிட்டா
லென்போல்வார்க்குடனிற்க வியல்வதன்று
தடமாலைமுடிசாய்த்துப் பணிந்தவானோர்
தஞ்சுண்டாவங்கருகீர் நஞ்சுண்டீரே. (எ)

## நேரிசையாசிரியப்பா.

நஞ்சுமிழ்பகுவாய் வெஞ்சினமாசுணந்
ன்முத ன்முருக்க வென்முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன் வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வி யாங்கியான்முன்
கருவிடைவந்த வொருநாட்டொடங்கி
மறவாமறலி முறைமிறழ்பேழ்வா
யயிற்றலையன்ன வெயிற்றிடைக்கிடந்தாங்
கருணையின்றி யொருவயிறோம்பற்குப்
பல்லுயிர்செகுத்து வல்லிதினருந்தி
யயர்த்தனனிருந்தும் போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக் கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்த தில்லைமூதூ
ராடுமம்பலக் கூத்தனைப்
பாடுதல்பரவுதல் பணிதலோவிலமே. (அ)

## வெண்பா.

இலவிதழ்வாய்வீழ்வா ரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங் காணே - னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தே யாளுடையார்நின்றாடு
நாடகங்கண்டபின்பான நான். (௯)

## கட்டளைக்கலித்துறை.

நானேபிறந்துபயன்படைத்தேனயனாரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த
தேனேதிருவுள்ளமாகியென்றீமையெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே. (௧௦)

## ஆசிரியவிருத்தம்.

சந்துபுனைய வெதும்பிமலரணை
தங்கவெருவி யிலங்குகலையொடு
சங்குகழல நிறைந்தவயலவர்
தஞ்சொனலிய மெலிந்துகிளியொடு
பந்துகழல்கள் மறந்துதளிர்புரை
பண்டைநிறமு மிழந்துநிறையொடு
பண்புதவிர வணங்களவொடு
நண்புபெருக விளைத்தவினையனை
நந்திமுழவு தழங்கமலைபெறு
நங்கைமகிழ வணிந்தவரவுக
ணஞ்சுபிழிய முரன்றுமுயலக
னொந்துநரல வசைந்தபகிரதி
யந்திமதியொ டணிந்துதிலைநக
ரம்பொனணியு மரங்கினடநவி
லெங்கணரசை யடைந்துதொழுதிவ
ளன்றுமுதலை யின்றுவரையுமே. (௧௧)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

வரையொன்றுநிறுவி யரவொன்றுபிணித்துக்
கடறடவாக மிடறொடும்வாங்கித்
திண்டோளாண்ட தண்டாவமரர்க்
கமிர்துணவித்த முதுபெருங்கடவுள்

கடையுகஞ்சென்ற காலத்துநெடுநில
மாழிப்பரப்பி லாழ்வதுபொருஅ
தஞ்சேலென்று செஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச் சிறுசெலுப்புரையிற்
பௌவமேழ பட்டதுபௌவத்தோ
டுலகுருழைத் தொருநாளுண்டது
மூலகமூன்று மளந்துழியாங்கவ
னீரடிநிரம்பிற்று மிலவேதேரி
லுரைப்போர்க்கல்ல தவன்குறைவின்றே
யிணையருகிய தனிமுதல்வானவன்
கேழற்றிருவுரு வாகியாழத்
தடுக்கியவேழு மெடுத்தனனெடுத்தெடுத்
தாழியூழி கீழுறக்கிளைந்துங்
காண்பதற்கரியநின் கழலும்வேண்டு
நிகிலலோகமு நெடுமறைத்தொகுதியு
மகிலசராசர மனைத்துமுதவிய
பொன்னிறக்கடவு ளன்னமாகிக்
காண்டிலாதநின் கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டு நீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின் மறுவின்றிவிளங்கி
யேவருங்காண வாடுதியதுவெனக்
கதிசயம்விளக்கு மன்றேயதிசயம்
விளையாதுமொழிந்த தெந்தைவளையாது
கல்லினும்வலிதது நல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினு முள்ளிடைநிரம்ப
வான்பொயச்ச மாயாவாசை
மிடைந்தனகிடப்ப விடம்பெறலருமையி
லைவர்கள்வர் வல்லிதிற்புகுந்து
மண்மகன்றிகிரியி லெண்மடங்குசுழற்ற
வாடுபுகிடந்த பீடினெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்து தழைந்தநின்சடையுஞ்
செய்யவாயு மையமர்கண்டமு

நெற்றியிற் றிகழ்ந்த வொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந் தடுத்தசெங்கையும்
புள்ளியாடையு மொள்ளிதின் விளங்க
நாடகமாடு நம்பகூடும்
வேதநான்கும் விழுப்பெருமுனிவரு
மாதியின்றிற மாதலின்மொழிவது
பெரியதிற்பெரிமை யென்றுமன்றே
சிறியதிற்சிறிமை யென்றுமன்றே
நிறைபொருண்மறைக ளைந்துநின்னவைநகும
விரண்டொடுமறிவினி லார்த்தவைத்த
மறையவர்தில்லை மன்றுகிழவோனே. (௩௨.)

## வெண்பா.

கிழவருமாய்நோய்கூர்ப்புக் கிற்பட்டுக்காமக்
குழவரும்போயாயுமா கண்டோ — மொழிநெறிய
வாயிருவிப்போதே மன்றினடமாடு
நாயகனொன்றுரைப்போ நாம். (௩௩.)

## கட்டளைக்கலித்துறை.

காமத்திருவென்றனைத்திருத்தேனைமாமலர்சேர்
தாமத்திருவன்சரண்பணியேன்சார்வதென்கொல்கோன்
வாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தான்
சேமத்திருவுன்றிருத்தில்லைசேர்வதொர்செந்நெறியே. (௩௪)

## ஆசிரியவிருத்தம்.

நெறிதருகுழலை யறலென்பார்க
ணிழலெழுமதிய நுதலென்பார்க
ணிலவினும்வெளிய நகையென்பார்க
ணிறம்வருகலச முலையென்பார்க
ளறிகுவதரிதி யிடையென்பார்க
ளடியிணைகமல மலரென்பார்க
ளவயவமினைய மடமங்கைய
ரழகியரமையு மவரென்செய

மதிமழுவுடைய கரனென்கிலர்
மறலியைமுனிய மரனென்கிலர்
மதிபொதிசடில தரனென்கிலர்
மலைமகண்மருவு புயனென்கிலர்
செறிபொழினிலவு திலையென்கிலர்
திருநடநவிலு மிறையென்கிலர்
சிவகதியருளு மரசென்கிலர்
சிலர்நரகுறுவ ர்றிவின்றியே. (கரு)

நேரிசையாசிரியப்பா.

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு
மினையனபலசரக் கேற்றிவினையெனுந்
தொன்மீகாம னுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநக ரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீ னலமந்துதொடரப்
பிறப்பெனும்பெருங்கட லுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற் பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னு நெடுங்கல்வீழ்த்து
நிறையெனுங்கூம்பு முரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய் கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படு காயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழா முன்னமலங்கன்
மதியுடனணிந்த பொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்த தெய்வநாயக
தொல்லெயிலுடுத்த தில்லைகாவல
வம்பலர்தும்பை யம்பலவாணநின்
னருளெனு நலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரை சேர்த்துமாசெய்யே. (கசு)

வெண்பா.

செய்யதிருமேனிச் சிற்றம்பலவருக்கென்
றையல்வளைகொடுத்தல் சாலுமே - யையன்றேர்
சேயேவருமளவிற் சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற் சங்கு. (கஎ)

## கட்டளைக்கலித்துறை.

சங்கிடத்தானிடத்தான்றனதாகச்சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றேயெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேலில்லையேயுன்பசப்பொழியே. (கச)

## ஆசிரியவிருத்தம்.

ஒழிந்ததெங்களுற வென்றொலோவொழிவி
லொன்னலார்கள்புர மூன்றெரிநாள்
விழுந்தெரிந்துருக ளாகவென்றிசெய்த
வில்லிதில்லைநகர் போலியார்
சுழிந்தவுந்தியி லழுந்திமேகலை
தொடக்கநின்றவர் நடக்கநொந்
தழிந்தசிந்தையினும் வந்தநாலுமொர்
சிந்தையாயொழிவ தல்லவே. (கரு)

## நேரிசையாசிரியப்பா.

அல்லல்வாழ்க்கை வல்லிற்செலுத்தற்குக்
கைத்தேருழந்து கார்வருமென்று
வித்துவிதைத்தும் விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப் பொருளுடன்கொண்டு
முளைமுதிர்பருவத்துப் பதியெனவழங்கிய
மருளாவயவ ரம்பிடைநடந்து
மிருளுறுபவ்வத் தெந்திரங்கடாஅய்த்
தன்னுயிரைப்பரட்டிற் குன்றுபார்த்தியங்கிய
மாற்றலேந்தற்குச் சோற்றுக்கடன்பூண்டு
தாளுறத்தோடியும் வாளுறத்தன்றி
மறியாவொருவனைச் செறிவந்தெருட்டியுஞ்
சொற்பலபுனைந்துங் கற்றனகழறியுங்
குடும்பப்பாசநெடுந்தொடர்ப்பூட்டி
யையவரைந்திடத் திரிபநொய்திற்

பிறந்தாங்கிறந்து மிறந்தாங்குபிறந்துங்
கணத்திடைத்தோன்றிக் கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கை யொப்பின்மின்போ
லுலப்பில்யோனிக் கலக்கத்துமயங்கியு
நெய்யெரிவளர்த்துப் பெய்முகிற்பெயறருந்
தெய்வவேதியர் தில்லைமூதூ
ராடகப்பொதுவி னாடகநவிற்றுங்
கடவுட்கண்ணுத னடமுயன்றெடுத்த
பாதப்போதும் பாய்புலிப்பட்டு
மீதியாத்தசைத்த வெள்ளெயிற்றரவுஞ்
சேயுயரகலத் தாயிரங்குடுமி
மணிகிடந்திமைக்கு மொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்த திருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்த வொற்றைநாட்டமுங்
கங்கைவழங்குந் திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறித்து மனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துரைக்க வுறுதவஞ்செய்தன
னான்முகன் பதத்தின் மேனிகழ்பதந்தா
னுறுதற்கரிய துண்டோ
பெறுதற்கரியதோர் பேறுபெற்றேற்கே. (உ0)

வெண்பா.

பெற்றோர்பிடிக்கப் பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித் தொழாநிற்கு - மொற்றைக்கை
மாமறுகச்சீறியசிற் றம்பலத்தான்மான்றேர்போங்
கோமறுகிற்பேதைக் குழாம். (உக)

கட்டளைக்கலித்துறை.

பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குத் தாதைதன்றாதையென்றேத்தும்பிரான்றண்புலிசைப்பிரான், கோதையந்தாமத்தண்கொன்றைகொடானின்றுகொல்லவெண்ணி, யூதையுங்காருந்தளிரொடுங்கூடியுலாவியவே. (உஉ)

## ஆசிரியவிருத்தம்.

உலவுசலதிவாழ்விட மமரர்தொழவுறவென
றுகருமொருவலருழியி னுறுதியொருவராழிய
புலவுகமழ்கரோடிகை யுடையபுனிதர்பூசுரர்
புலிசையலர்செய்போதணி பொழிலினிழலின்வாழ்வதோர்
கலவமயிலனார்சுருள் கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடை நெடியவிழியினாரித
ழிலவிலழகியாரிடை கொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரென நிதயமுழுதுமாளவரே. (உ௬)

## இணைக்குறளாசிரியப்பா.

ஆளைப்புதிதின்வந் தடைந்திலமந்தநின்
றுளினைவ றலையினியற்றி
வழிவழிவந்த மரபினமொழிவது
ஊர்ந்தெழுந்தவையெஞ் சிந்தையிற்கிடந்தி
னனவேபோல நாடொறும்பழகிக்
கனவிலுநவிற்றுங் காதலேம்விளைகெடக்
கேட்பதுநின்பெருங் கீர்த்திகேட்பது
நின்னெறியல்லாப் புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தை வரைந்துநிறுவென
வருத்திசெய்திடுவ தருத்திரசாதனங்
காலையுமாலையுங் கால்பெயர்த்திடுவதுன்
னாலயம்வலம்வரு தற்கேசால்பினிற்
கைகொடுகுயிற்றுவ தையநின்னது
கோயிற்பல்பணி குறித்தேயோயா
தருகிநின்னினைந் துருகிசோரக்
கண்ணிற்காண்பதெவ் வுலகினுங்காண்பன வெல்லா
நீயேயாகி நின்றதோர்நிலையே நாயேன்
றலைகொடுசார்வதுன் சரண்வழியல்லா
லலைகடல்பிறழினு மடாதேயதனாற்

பொய்த்தவவேடர் கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின் வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழி சமைத்தாங்கமைவயின்
மானுடமாக்களை வலியப்புகுத்து
மானாவிரதத் தகப்படுத்தாழ்த்து
வளைவுணர்வெனக்கு வருமோவுளர்தரு
நுரையுந்திரையு நொப்புறுகொட்பும்
வரையில்சீகர வாரியுங்குரைகடற்
பெருத்துஞ்சிறுத்தும் பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகி யிருங்கடலடங்குந்
தன்மைபோலச் சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றி நின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்றா யொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய் மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர் நடுவுபுக்கடங்கிச்
செம்பொற்றில்லை மூதூ
ரம்பலத்தாடு மும்பர்நாயகனே. (௨௪)

வெண்பா.

நாயனையவென்னைப் பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனாயருளுந் தம்பிரான் – றூயவிரை
மென்றுழாய்மாலொடயன் றேடவியன்றில்லை
மன்றுளேயாடு மணி. (௨௫)

கட்டளைக்கலித்துறை.

மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம்வேர்ப்பவம்மன்றுக்கெல்லை
மணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. ௨௬

ஆசிரியவிருத்தம்.

என்னாயினிமட வரலாய்செய்குவ
தினமாய்வண்டுகண் மலர்கிண்டித்
தென்னாவெனமுரல் பொழில்சூழ்தில்லையு
ளரனார்திருமுடி யணிதாமந்

தன்றாலல்லது தீராதென்னிடர்
தகையாதுயிர்கரு முகிலேறி
மின்றுநின்றது துளிவாடையும்வர
வீசாநின்றது பேசாயே.

இணைக்குறளாசிரியப்பா.

பேசுவாழி பேசுவாழி
யாசையொடுமயங்கி மாசறுமனனே
பேசுவாழி பேசுவாழி
கண்டனமறையு முண்டனமலமாம்
பூசினமாசாம் புணர்ந்தனபிரியு
நிறைந்தனகுறையு முயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும் பெரியனசிறுக்கு
மொன்றொன்றொருவழி நில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர் தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர் கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர் படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர் நலத்தினின்வந்தோ
ரனையரெங்குலத்தின ரிறந்தோரனையவர்
பேருநின்றில போழுந்தெரி
னீயுமஃதறிதி யன்றேமாயப்
பேய்த்தேர்போன்று நீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்று நனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையை மதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக் கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவு சார்ந்தனைநீயு
நன்மையிற்றிரிந்த புன்மையையாதலி
னழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்தொழுகி
வளைவாய்த்தூண்டிலி னுள்ளிரைவிழுங்கும்
பன்மீன் போலவு
மின்னுபுவிளக்கத்து விட்டில்போலவு
மாசையாம்பரிசத் தியானைபோலவு

மோசையின் விளிந்த புள்ளுப்போலவும்
வீசியமணத்தின் வண்டுபோலவு
முறுவதுணராச் செறுவுழிச்சேர்ந்தனை
நுண்ணூனூற்றுத் தன்னகப்படுக்கு
மறிவில்கீடத்து நுர்நுழிபோல
வாசைச்சங்கிலிப் பாசத்தொடர்ப்பட்
டிடர்கெழுமனத்தினே டியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக் குறங்குபுகிடத்தி
கறவைநினைந்த கன்றெனவிரங்கி
மறவாமனத்து மாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்கு மற்புதக்கூத்தனை
மறையவர்தில்லை மன்றுளாடு
மிறையவனென்னிலை யென்னினைந்தனையே. (உஅ)

வெண்பா.

நினையார்மெலியார் நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றை பொதுவோ - வனைவீரு
மெச்சியேகாண வியன்றில்லையானருளென்
பிச்சியேநாளைப் பெறும். (உகூ)

கட்டளைக்கலித்துறை.

பெறுகின்றவெண்ணிலித்தாயரும்பேறும்யானுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொடுஞ்சென்
றிறுகின்றநாள்களுமாகிக் கிடந்தவிடுக்கணெல்லா
மறுகின்றனதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (ஙo)

ஆசிரியவிருத்தம்.

அம்பலவரங்கனை ரடைந்தவர்தமக்கே
யன்புடையரென்னுமிதெ னுனையயுரித்துக்
கம்பலமுவந்தருளு வீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரிய காதலறியாதே
வம்பலர்நிரைந்துவசை பேசவொருமாட்டே
வாடையுயிரீரமணி மாமையுமிழந்தென்
கொம்பலமருந்தகைமை கண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியி ரென்றருளுவீரோ. (ஙக)

## இணைக்குறளாசிரியப்பா.

அருளுவாழி யருளுவாழி
புரிசடைக்கடவு ளருளுவாழி
தோன்றுழித்தோன்றி நிலைதவக்கரங்கும்
புற்புதச்செவ்வியின் மக்களியாக்கைக்கு
நினைப்பினுங்கடிதே யிளமைநீக்க
மதனினுங்கடிதே மூப்பின்றொடர்ச்சி
யதனினுங்கடிதே கதுமெனமரணம்
வாளுளன்பருகி யுடம்பைவறிதாக்கி
நாளுளன்பயின்ற நல்காக்கூற்ற
மினையதன்மைய திதுவேயிதனை
யனைத்தெனக்கருதி யிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவே செய்வனசிலவே
செய்யாநிற்பனசிலவேயவற்றிடை
நன்றென்பசிலவே தீதென்பசிலவே
யொன்றினும்படாதன சிலவேயென்றிவை
கணத்திடைநினைந்து களிப்பவுங்கலுழ்பவுங்
கணக்கில்கோடித்தொகுதியவைதா
மொன்றொன்றுணர்வுழி வருமோவனைத்து
மொன்றாவுணர்வுழி வருமோவென்றென்று
தெளிவுழித்தேறல் செல்லேமனிய
மனத்தின்செய்கைமற் றிதுவேநீயே
யரியைசாலவெம் பெருமதெரிவுறி
னுண்டாய்த்தோன்றுவ யாவையுநீயே
கண்டனையவைநினைக் காணுவதா
னின்வயின்மறைத்தோ யல்லையுன்னை
மாயாய்மன்னினை நீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற் கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய் பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடை நின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்பினு மணியைநீயே

நண்ணரியுமிடையொன்றின் மறைந்தோயல்லை
யிடையிட்டுநின்னை மறைப்பதுமில்லை
மறைப்பினு மதுவு
நீயேயாகி நின்றதொர்நிலையே யஃதான்று
நினைப்பருங்காட்சி நின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சி யென்னிலையதுவே
யினிநனியிரப்பதொன் றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப் புலன்வழிபடரினு
நின்வயினினைந்தே மாகுதனின்வயி
னினைக்குமாநினைக்கப் பெறுதலனைத்தொன்று
நீயேயருளல் வேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லென வெறிவிசும்புவறிதாக
விம்பருய்ய வம்பலம்பொலியத்
திருவளர்தில்லை மூதூ
ரருநடஞ்செயிற்று மாதிவானவனே. (௩௨)

வெண்பா.

வானோர்பணிய மணியாசனத்திருக்கு
மானாத செல்வத் தரசன்றே - மானுகம்
பந்திப்பார்நின்றும் பைம்பொன்னினம்பலத்தே
வந்திப்பார்வேண்டாத வாழ்வு. (௩௩)

கட்டளைக்கலித்துறை.

வாழ்வாகவுந் தங்கள்வைப்பாகவுமறையோர்வணங்க
வாள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வாரறியாச்சடுலநஞ்சுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றோதெய்வமாகவணங்குவதே. (௩௪)

ஆசிரியவிருத்தம்.

வணங்குமிடையீர்வறிது வல்லியிடையாண்மேல்
மாரசரமாரிபொழி யப்பெறுமனத்தோ
டிணங்கிவிடலானுமெலி யப்பெறுமிடர்க்கே
யூதையெரிதூவியுல வப்பெறுமடுத்தே

பிணங்கியரவோடுசடை யாடநடமாடும்
பித்தரெனவும்பிதய மித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமறி யாடுமதுவீரு
மையலையுமல்லலையு மல்லதறியீரே. (ரு௫)

நேரிசையாசிரியப்பா.

ஈரவேரித் தார்வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கை மதியின்மீதசைய
வண்டியங்குவரைப்பி னெண்டோட்செல்வ
வொருபாற்றோடு மொருபாற்குழையு
மிருபாற்பட்ட மேனியெந்தை
யொல்லொலிப்பழனத் தில்லைமூதா
ராடகப்பொதுவி னாடகநவிற்று
மிமையாநாட்டத் தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந் தாதையானே
மதுமழைபொழியும் புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக் கானகத்தியற்றிய
தெய்வமண்டபத் தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்ப வேறிமங்கைய
ரிமையாநாட்டத் தமையாநோக்கத்
தம்மார்புபருகச் செம்மாந்திருக்கு
மாறுச்செல்வத்து வானோரின்ப
மதுவேயெய்தினு மெய்துகதுமெனத்
தெறுசொலாள ருறுபிணந்திருகி
யெற்றியுமீர்த்துங் குற்றங்கொளீஇ
யீர்ந்தும்போழ்ந்து மெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்து மதநாய்க்கீந்துஞ்
செக்குறப்பெய்துந் தீக்கிர்வாக்கியும்
புழுக்குடையழுவத் தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்கால மழுத்தியின்னு
வரையிறண்டத்து மாறுக்கடுந்துயர்

நிரயஞ்சேரினுஞ் சேர்கவுரையிடை
யேனோறென்னை யானுவிரும்பி
நல்லனெனினு மென்கவவரே
யல்லனெனினு மென்கநில்லா
திருவொடுதிளைத்துப் பெருவளஞ்சிறையா
தின்பத்தழுந்தினு மழுந்துகவல்லாத்
துன்பத்துறையினுந் துறைகமுன்பி
னிளமையொடுபழகிக் கழிமூப்புக்குறுக
தென்றுமிருக்கினு மிருக்கவன்றி
யின்றேயிறக்கினு மிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனே வெறுத்தலுமிலனே
யாண்டகைக்குரிசினின் னடியரொடுங்குழீஇத்
தெய்வக்கூத்துநின் செய்யபாதமு
மடையவுமணுகவும் பெற்று
கிடையாச்செல்வங் கிடைத்தலானே. (௩௬)

வெண்பா.

ஆனேறேபோந்தாலறிவுண்டேயன்புடைய
நானேதான்வாழ்ந்திடினு நன்றன்றே - வானோர்க்கு
வாமான்பொழிற்றில்லை மன்றைப்பொலிவித்த
கோமானையித்தெருவே கொண்டு. (௩௭)

கட்டளைக்கலித்துறை.

கொண்டல்வண்ணத்தவனான்முகனிந்திரன்கோமகுடத்
தண்டார்மிண்டித்தொழுமம்பலக்கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டர்மிண்டித்திரிவாரெனக்கென்னினிநாணமென்றன்
றொண்டர்தொண்டர்க்குத் தொழும்பாய்த்திரியத்தொடங்கினனே.

ஆசிரியவிருத்தம்.

தொடரகரைத்தங்க முன்புளவாயின
தொழில்கண்மறுத்தொன்று மொன்றியிடாதொரு
சுளிவுதலைக்கொண்டு புன்புலைவாரிக
டுளையொழுகக்கண்டு சிந்தனையோயவொடு

நடைகெடமுற்கொண்ட பெண்டிர்பொருவொரு
நடலைநமக்கென்று வந்தனபேசிட
நலியிருமற்கஞ்சி யுண்டிவெருவிழு
நரகவுடற்கன்பு கொண்டலைவேனினி
யிடலொழியப்பண் டிலங்கையர்கோனொரு
விரலினமுக்குண்டு பண்பலபாடிய
விருசெவிக்கொண்டு முன்புளதாகிய
வெருளிதவிர்த்தன்று பொன்றியிடாவகை
யிடமருள்வைக்குஞ் செழுஞ்சடருறிய
தெளியமுதத்தின் கொழுஞ்சுவைநீடிய
தில்லைநகரிற்செம்பொ னம்பலமேவிய
சிவனைநினைக்குந் தவஞ்சதுராவதே. (௨௯)

## நேரிசையாசிரியப்பா.

சதுர்முகன்றந்தைக்குக் கதிர்விடுபடை
யாழிகொடுத்த பேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்த வியக்கர்கோனுக்கு
மாநிதியிரண்டு மாறாப்பெருவளந்
தளைகையொன்று தளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்த செல்வம்போற்றி
ஆணிமுலைடைந்த மாணிக்காக
நாண்முறைபிறழாது கோண்முறைவலித்துப்
பதைத்துவருங்கூற்றைப் படிமிசைத்தெறிக்க
வுதைத்துயிரளித்த வுதவிபோற்றி
குலைகுலைகுலைந்த நிலையாத்தேவர்
படுபேரவல மிடையின்றிவிலக்கிக்
கடல்விடமருந்தின கருணைபோற்றி
தவிராச்சிற்றத் தவுணர்மூவெயி
லொல்லனல்கொளுவி யொருநொடிபொடிபட
வில்லொன்றுவளைத்த வீரம்போற்றி
பூமென்கரும்பொடு பொடிபடநிலத்துக்
காமனைப்பார்த்த கண்ணுதல்போற்றி

